# 1921 - ரயில் பெட்டி கோரச்சாவுகள்




**1921**, நவம்பர், 9 -

மலபாரிலிருந்து மதராசுக்கு வந்து கொண்டிருந்த சரக்கு ரயில் பெட்டிகளில் ஒன்றைத் தவிர மற்றப் பெட்டிகளில் சரக்குகள் இருந்தன.

ஒன்றில் மட்டும் மனிதர்களே சரக்காய் அடைக்கப்பட்டிருந்த னர். அதில் அடைக்கப்பட்டிருந்தவர்களின் எண்ணிக்கை 120.

அறுபது, எழுபது எண்ணிக்கையினரே கால்கள் வைத்து நிற்கக்கூடிய பெட்டியில் 240 கால்கள். 120 கைதிகளும் ஒரு காலில்தான் நிற்கவேண்டும். கால்மாற்றி கால்மாற்றி நின்றே களைத்துப் போகும்நிலை.

காற்றுப்புக முடியாதபெட்டி; எப்படியோ புகுந்த காற்றும் மனிதக் கவிச்சியில் மாசடைந்து விடும் சூழல். வெளிச்சம் புகமுடியாத பெட்டி; அப்படியே புகுந்தாலும் ஆடி அசைந்து வெளியேறிவிடும் மலை இடுக்குப் பயணத்தில்.

உரோமக் கால்களெங்கும் வியர்வை, ஒருவர் மூச்சு ஒருவர் மேல் பட்டு வெப்பம், ஒருவர் உடல் ஒருவர் மேல்பட அளவற்ற கசகசப்பு, நாலுபக்க பெட்டிச் சுவர்களிலே மோதல், நடுவில் நின்றவர்கள் பிடிமானமில்லாமல் சாய்தல், விழுந்தவர்கள் கீழே விழாமலும் கீழே வீழ்ந்தவர்கள் மேலெழ முடியாமலும் கவிழ்தல்.

கசாப்புக்காய் கழுதைகள் ஆந்திராவுக்கும் கறுப்பு எருமைகள் கேரளாவுக்கும் லாரிகளில் திணிக்கப்பட்டு கொண்டு செல்லப் படுவது போல் மாப்ளாப் போராளிகள் அந்தமான் சிறையில் அடைக்கப்பட சரக்கு ரயில்பெட்டியில் அடைக்கப்பட்டு கொண்டு செல்லப்பட்டுக் கொண்டிருந்தார்கள். அசைக்க முடியாத அளவுக்கு அவர்களின் கைகள் பின்புறமாகக் கட்டப்பட்டிருந்தன.

இயற்கை அவஸ்தைகளைத் தீர்க்க முடியவில்லை. கண்கள் செருகினாலும் தூங்க முடியவில்லை. ஒருவருக்கொருவர் பேசிக்கொள்ள முடியவில்லை.

மரண ஓலம்! ரயில் தண்டவாளங்கள் கடகடக்க, என்ஜின் சத்தத்தை அடக்கும் ரயிலின் ஓலம்!

இதற்கு முன்பும் சரக்குப் பெட்டிகளில் மாப்ளாப் போராளிகள் அடைத்து அனுப்பப்பட்டிருந்தனர், ஆனால் அளவோடு......

ரயில் ஐம்பது மைல்களைத் தாண்டியிருக்கும். கூச்சலும் குழப்பமும் படிப்படியாக நிற்கத் தொடங்கின. எது நேர்ந்தாலும் ஏற்றுக்கொள்ள வேண்டியதுதான் என ஏற்கெனவே ஏற்பட்டிருந்த மனநிலை மேலும் வலுவாகிக் கொண்டிருந்தது, 'அல் லாஹ், அல்லாஹ்' என்ற நாவொலிகள்கூட உதட்டொலிகளாகி அமைதிபூத்துக் கொண்டிருந்தது. சப்தங்கள் ஓய்ந்து நிசப்தங்கள்.

எல்லாரும் மூச்சுவிடத் தத்தளித்துக் கொண்டிருந்தபோது கதவருகே நின்று இடுக்கின் வழியாக காற்றை சுவாசித்துக் கொண்டிருந்த ஒருவர் அமைதியைக் கிழித்தெறியும் வண்ணம் பாடினார். அப்பாடல் பத்ருப் போராளிகளைப்பற்றிய பாடல். அண்ணலார் கலந்துகொண்ட முதல் யுத்தமாம் பத்ரு யுத்தத்தில் உயிர்நீத்த தியாகிகளைப்பற்றிய பாடல் அது.

எந்த நேரத்தில் எந்தப்பாட்டு? இடுக்கண் வருங்கால் நகுக என்பதன் செயல்பாடுதானே இது!

அப்பாடலைப் பாடியவர் ஒரு சாதாரண தொழிலாளி. ஓஷா என்றும் நாவிதர் என்றும் அழைக்கப்பட்ட முடிதிருத்தும் கலைஞர். பெயர் கல்லாடி காதர்.

பாட்டைக்கேட்ட மாப்ளாப் போராளிகளின் வலிகள் எங்கோ பறந்தன. நாடிநரம்புகளில் முறுக்கேறின. தயங்கித் தயங்கி வந்த காற்று சூறாவளியைப்போல் வீசியதாகத் தெரிந்தது.

'பத்ரு சஹாபாக்கள்' பாடலைத் தொடர்ந்து கல்லாடி காதர் மாப்ளாக் கிளர்ச்சிக்கு முன் பாடப்படும் 1843-ஆம் வருடத்திய ஷஹீத்களைப் பற்றிய பாடலைப் பாடினார்.

தூக்கமின்றியும் பட்டினியோடும் வலிகளோடும் பயணித்த மாப்ளாப் போராளிகள் கடந்தகால நினைவுகளில் மிதந்தனர்.

கால்கைகளில் வலி, குறுக்கில் வலி, முதுகில் வலி, கழுத்தில் வலி, தலையில் வலி, மனமெங்கும் வலிகள்!

மாப்ளா போராளிகளை அள்ளிப் போட்டுக்கொண்டு ஊர்ந்து கொண்டிருந்த ரயில் ஒத்தப்பாலத்தைக் கடந்து பாலக்காடு நோக்கி சென்று கொண்டிருந்தது.

எங்கும் இருள். உலகை இருள் போர்த்திக் கொண்டிருந்தது. போராளிகளின் பெட்டிக்குள்ளும் அடர்த்தியான இருள். அவர்கள் கண்களுக்கு வெளியிலும் உள்ளும் இருள்.

பலர் அரைமயக்க நிலையில் இருந்தார்கள்; சிலர் முழுமயக் கத்தில் இருந்தார்கள். பாட்டுச் சப்தமெல்லாம் அடங்கி மூச்சுச் சத்தம் மட்டுமே கேட்டது. பேச்சுச் சப்தமெல்லாம் அடங்கி முனகல் சப்தம் மட்டுமே கேட்டது.

பசியும் பட்டினியும் அவர்களைப் பரலோகத்துக்கு அழைத்துச் சென்று கொண்டிருந்தன. மனிதக் கவிச்சி மட்டும் வீசிய இடத்தில் இப்போது சிறுநீர்க் கவிச்சியும்.

பெட்டிக்குள் அடைபட்டுக்கிடப்பவர்கள் எத்தகைய நிலையில் இருக்கிறார்கள் என்பது பெட்டிக்குள் இருப்பவர்களுக்கே தெரியவில்லை.

மலபாரிலிருந்து புறப்பட்ட ரயில் சிக்னலுக்காக நின்றதே தவிர வேறெதற்காகவும் நிற்கவில்லை. அடைக்கப்பட்டவர்கள் அடைக்கப்பட்டவர்களாகவே இருந்தார்கள்.

அவர்கள் மதராஸ் கொண்டு செல்லப்பட்ட பின்னரே பெட்டி திறக்கப்படும். கைவிலங்கிட்டு பிடித்துச் செல்லப்படும் அவர்களின் கைகள் காப்பைக் கழற்றுவது எப்போது - இரயிலில் இரண்டு மூன்றுநாள் பயணம்; கப்பலில் ஒருவாரம் பயணம்! பத்து நாட்களுக்குப் பின்தான் கைவிலங்குகள் கழற்றப்படுமா?

உலகிலேயே எங்கும் பார்த்திராத காட்டு விலங்காண்டிச் செயல்! உலகுக்கு நாகரிகத்தையும் பண்பாட்டையும் கற்றுத் தந்ததாகக் கூறும் பிரிட்டிஷார் செய்திருக்கும் கேவலத்திலும் கேவலம் இது.

போராளிகளின் பெட்டி முழு அமைதியில். தண்டவாளங்களின் கடாகடா சப்தமும், ரயில் சக்கரங்களின் கிரீச் ஒலியும் எஞ்ஜினின் ஓசையும் அவ்வப்போது கேட்கும் 'க்கூகூ' என்ற ஊதலும் தவிர வேறு சப்தங்கள் இல்லை.

தூரத்து இடிமுழக்கமும், அக்கா குருவியின் அழைப்பும் வனாந்தரங்களின் பெரும்பரப்புக்கு போதிய பின்னணி இசையாக இல்லை.

பாலக்காட்டை ரயில் கடந்தபோது மழை பொழியத் தொடங்கியது. தூறலாகத் தொடங்கிய மழை பெருமழையானது.

ஈரக்காற்று பெட்டிக்குள் புகுந்து சிலரின் மூச்சை நனைத்தது. சிலரின் மூச்சைக் காணாத காற்று மௌனமானது.

எரிச்சலடைந்த கண்களுக்கு இதமான காற்று இயக்கமற்ற கண்களைப் பார்த்து இரங்கற்பா பாடியது.

சிலரின் வாய் வழியாய்ப் புகுந்த காற்று வாழ்த்தைப் பெற்றது. சிலரின் வாய்களைப் பார்த்த காற்று மோதித் திரும்பியது.

மழை ஓய்ந்து கொண்டிருந்தது. கோயம்புத்தூரை நோக்கி ஊர்ந்து கொண்டிருந்த அந்த இரும்பு கம்பளிப்புழு போத்தனூரை அடையும்முன் ரயில் பெட்டியிலிருந்து மரண ஓலங்கள். ரயில் பெட்டிச்சுவர்களும் கதவுகளும் கால்களால் தட்டப்பட்டன. உடன் கூச்சல் சப்தங்கள்.

ரயிலை நிறுத்தச் சொல்லியே சப்தங்கள் எழுப்பப்பட்டன.

கரும்புகையைக் கக்கியபடி ரயில் போத்தனூரில் நின்றது.

மாப்ளாப் போராளிகளின் கூக்குரல்களால் ரயில் நிற்கவில்லை. அது நிறுத்தப்பட வேறு காரணமிருந்தது.

ரயில், ஸ்டேசனைக் கடக்கும்போது மூங்கில் வளையத்துக்குள் வைத்து சாவி கொடுக்கப்படும். ஸ்டேசன் பணியாள் கொடுக்கும் சாவியை எஞ்ஜின் டிரைவர் கை நீட்டி வாங்கிக் கொள்வார். இரயில் ஓடிக்கொண்டிருக்கும்போதே சாவி வழங்கப்படுதலும் வாங்கப்படுதலும் நடக்கும். சாவி வாங்கப்படாத சூழலில் ரயில் நிறுத்தப்படும்.

மூங்கில் வளையம் வாங்கப்படும்போது தவறி விழுந்த காரணத்தாலேயே ரயில் நிறுத்தப்பட்டது.

இரயில் நிறுத்தப்பட்டபோது மாப்ளா போராளிகளின் பெட்டியிலிருந்து கேட்ட கூச்சலும் கூக்குரலும் வாய்விட்டு எழுந்த கதறலும் எஞ்ஜின் டிரைவருக்கும் கேட்டது. கார்டும் கீழிறங்கி வந்தார். உடன் பாதுகாப்புக்கு வந்த காவலர்களும் மாப்ளாப் பெட்டியை நோக்கி வந்தனர்.

இரயில் நிலைய நடையில் நின்றவர்களும் ரயில்வே கலாசிகளும் மாப்ளாப் பெட்டியை அடைய, கூக்குரல்களைக் கேட்ட அக்கம்பக்க பொதுமக்களும் திரண்டனர்.

'யா அல்லாஹ்', 'படைச்ச ரப்பே', 'தம்புரானே', என இறைவனை அழைக்கும் குரல்கள்.

அடித்து உதைத்ததாலும் கூச்சலாலும் ரயில் பெட்டி அதிர்ந்தது. சூழ்ந்து நின்றவர்களும் அதிர்ந்து போய் நின்றார்கள்.

''திறந்து விடுங்க, திறந்து விடுங்க'' என கூடியிருந்தோர் குரல் எழுப்பினர்.

கார்டு காவலர்களைப் பார்த்தார்; காவலர்கள் கார்டைப் பார்த்தனர்.

''மதராஸ் சென்றபின்தான் பெட்டியைத் திறக்க வேண்டும்'' என்ற கட்டளையால்தான் கார்டும் காவலர்களும் கண்களால் பேசிக் கொண்டனர்.

'எதற்காகவோ மனிதர்கள் மாடுகளைப்போல் கொண்டு செல்லப்படுகிறார்கள்' என எண்ணிக் கொண்டிருந்த மக்களுக்கு உண்மை தெரியத் தொடங்கியது.

போலீஸ்காரரிடம் பொதுஜனம் கேட்ட கேள்வியில் உண்மை வெளிப்பட்டுவிட்டது. மக்கள் ஆவேசப்பட்டனர். காட்டு மிராண்டிச் செயலைக் கண்டு ஆர்த்தெழுந்தனர்.

இரயில்வே கலாசி ஒருவர் சம்மட்டியொன்றை எடுத்து வர அடுத்தடுத்து ஆயுதங்கள் சேர பொதுமக்களாலேயே பூட்டு உடைக்கப்பட்டது.

உடைக்கப்பட்ட பூட்டுச் சிதற கதவுகள் திறக்கப்பட பொல பொலவென மனிதர்கள் கீழே விழுந்தனர். அவர்கள் மரணித்தும் மயக்கப்பட்டும் நடைமேடையில் கிடந்தனர். சிலர் தளர்நடை போட்டு தரையில் குதிக்க, சிலர் தள்ளாடிச் சரிந்தனர்.

பெட்டிக்குள்ளும் மரணித்தவர்களும் மயக்கமடைந்தவர் களும்!

எல்லாருடைய கைகளும் முதுகுக்குப் பின்னால் கட்டப்பட் டிருந்தன; அல்லது கைவிலங்கிடப்பட்டிருந்தன.

இரயில்வே நடைமேடையே சவக்காடாகக் காட்சியளித்தது. உயிரோடிருந்தவர்கள் மரணித்தவர்களின் பெயரைச் சொல்லி கூவியழைத்துக் கதறினார்கள். தங்களின் கழிவிரக்க நிலையை எண்ணிப் பதறினார்கள்.

சிறிது நேரத்தில் போத்தனூரே ரயில்வே ஸ்டேசனில். இரயில்வே நிர்வாகமும் காவல்துறையும் விரைந்து செயல்பட ராணுவம் வந்தது.

மலப்புரத்தில் சரக்கு ரயிலில் ஏற்றி அடைக்கப்பட்டவர் களின் எண்ணிக்கை 120. அவர்களில் ஐம்பதுபேர் மயங்கியும் தள்ளாடியும் கைகால் நடுங்கியும் பாதிப்பிணமாகவும் ரயில்வே நடைமேடையை சோகச்சித்திரமாக மாற்றியிருந்தனர். 70 பேர் பிணமாக -

85 ஆண்டுகால மாப்ளாக்களின் போராட்டத்தின் மிகவும் துன்பகரமான காலகட்டமாக 1921-ஆம் ஆண்டு அமைந்துவிட்டது.

மாப்ளாக்களில் மேல்மட்டத்திலிருந்த வியாபாரிகள், கானாம்தார்கள், குத்தகைக்காரர்களிலிருந்து மிகச்சாதாரண கூலித் தொழிலாளிகளும் கபர்ஸ்தானில் குழி தோண்டுபவரும் கூட போராளிகளாக மாறியிருந்தனர். மார்க்கம் தெரிந்தவர்களோடு மார்க்கம் தெரியாதவர்களும் தோளோடு தோள் நின்று போராடியதை ஷஹீதான 70 பேரின் பட்டியல் பறைசாற்றும்,

தங்ஙள்கள், ஹாஜிகள், இமாம்கள், ஹாபிஸ்கள் என மார்க்க அறிஞர்களோடு மோதின்கள், நாவிதர்கள், கூலித்தொழிலாளிகள் என அடிமட்டத்திலிருந்தோரும் போராளிகளாக மாறியிருந்தனர்.

இறந்த 70 பேர்களில் கூலித்தொழிலாளிகள் முப்பத்திரண்டு பேர். இவர்கள் கூலிப்படையினர் அல்ல, கொண்ட கொள்கையை நிறைவேற்ற கூர்வாள் ஏந்தியவர்கள்.

உழவர்ப் பெருங்குடிமக்கள் பத்தொன்பது பேர், நிலத்தைக் கிழித்துப் பயிரிட்டவர்கள் ஜென்மிகளின் உடலைக் கிழிக்க எழுந்தவர்கள்.

திருக்குர்ஆனை மனனம் செய்த ஹாபிஸ்கள் நான்குபேர், புனிதப் போரைப்பற்றிக் கற்றவர்கள் விடுதலைப்போருக்காகக் களம் கண்டவர்கள்.

மதரஸா ஆசிரியர்கள் இரண்டு பேர், பிள்ளைகளிடம் திருமறையைப் பாடம் சொல்லியவர்கள் எதிரிகளுக்குப் பாடம் சொல்ல படைவீரர் ஆனவர்கள்.

தொழுகைக்காக அழைப்போசை விடுப்பவர்கள் இருவர். அழைப்புக்குரல் கொடுத்த அவர்கள் போர்க்குரல் கொடுத்து கைதானார்கள்.

வணிகர்கள் இருவர்; சிறுவணிகர்கள் இருவர். சிறுமர வணிகர் ஒருவர். வாழ்க்கை வியாபாரத்தில் வரவினையே பார்த்த வர்கள் தங்களைச் செலவு பண்ண வந்தவர்கள்.

தேநீர்க்கடைக்காரர்கள் மூவர். தேநீரைப் பார்த்துப் பார்த்து சலித்து செந்நீர் பார்க்க வந்தவர்கள்.

பொற்கொல்லர் ஒருவர்; தச்சர் ஒருவர். இவர்கள் ஆசாரி களில் இருபிரிவினர். உட்பிரிவினைப் புறந்தள்ளி கொல்லராகி வாட்களை உருவாக்கியவர்கள். ஆட்களை வாட்களாகக் கூர் தீட்டியவர்கள்.

ஒரே ஒருவர் முடிதிருத்தும் தொழிலாளி. ஆங்கிலேயரை திருத்த அணியமானவர். மாப்ளா அணியினரைப் பாட்டாலே வீறு கொள்ளச் செய்தவர்.

எழுபது பேரும் ஷஹீத்களாக -

போத்தனூர் ரயில் நிலையமே பிணக்காடாக -

வேடிக்கை பார்க்க வந்தவர்களை விரல் விட்டு எண்ணி விடலாம். தங்கள் சொந்தச் சகோதரர்கள் இறந்ததாக எண்ணியே திரண்ட மக்களில் பலர் அழுதனர். இராணுவமும் போலீசும் கூட்டத்தைக் கட்டுப்படுத்த முயன்று தோற்றுக் கொண்டிருக்கை யில் அக்கம்பக்கத்து ஊர்களிலிருந்தெல்லாம் மக்கள் தேனீக் களைப்போல் திரண்டனர்.

அவர்கள் ஆங்கிலேயரின் எடுபிடிப் பட்டாளங்களைக் கொட்டிவிடுவார்களோ எனும் நிலையில் ரயில் நிலையத்தின் உள்ளும் புறமும் பிதுங்கியது.

ஐம்பது பேர்களைப் பாதுகாக்க வேண்டும். எழுபது பேர் களை நல்லடக்கம் செய்ய வேண்டும்!

அரசு இயந்திரம் விழிபிதுங்கி நின்றது. திரண்ட ஆயிரக்கணக் கான மக்களில் நூற்றுக்கணக்கான முஸ்லிம்களும் இருந்தனர். அவர்கள் பிரச்னையைப் பெரிதுபடுத்தாமல் ஷஹீதானவர்களை நல்லடக்கம் செய்ய ஆயத்தமாயினர்.

எங்கோ பிறந்தவர்கள் நூற்றுக்கணக்கான மைல்களுக்கப்பால்

உயிரிழந்து கிடந்தாலும் அவர்கள் ஊரும் உறவும் நாங்களே என்பது போல் இஸ்லாமிய உம்மா செயல்படத் தொடங்கியது.

ஷஹீதானவர்களைக் கொண்டுபோய் கபர்ஸ்தானில் புதைத்தவர்கள் ஆங்கிலேய ஆட்சியதிகாரத்தைக் குழிதோண்டிப் புதைக்க கால் நூற்றாண்டு காலம் காத்திருந்தனர்.

